10746

உ
சிவமயம்

மெய்கண்ட தேவர் அருளிய

# சிவஞான போத மூலமும்

ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய
தெளிபொருள் விளக்கவுரையைத்
தழுவிய

# சிற்றுரையும்

கிடைக்குமிடம்:-
தாளையான் அச்சகம்
178, டாம் வீதி,
கொழும்பு-12.
(இலங்கை)

தோன்றல் 8 1971

131
மெய்
சிவஞான
SL PR

உ
சிவமயம்

மெய்கண்ட தேவர் அருளிய

# சிவஞான போத மூலமும்

ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய
தெளிபொருள் விளக்கவுரையைத்
தழுவிய

# சிற்றுரையும்

கிடைக்குமிடம்:-
தாளையான் அச்சகம்
178, டாம் வீதி,
கொழும்பு-12.
(இலங்கை)

தோன்றல் 8 1971

முதற் பதிப்பு — 1971
500 பிரதிகள்

சற்குரு வணக்கம்

அழியா அவித்தை அழிந்தொழிய ஞான
விழியா லெரிக்கும் விமலன் — மொழியதனை
நெஞ்சே நினைந்துருக நீங்காக் குருபரன்றன்
கஞ்சமலர்த் தாளே கதி.

உ
சிவமயம்

# முகவுரை.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த வருட்கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர் தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—சிவஞான சித்தியார்

மெய்ஞ்ஞானிகளால் போற்றப்பட்டு வரும் சிறந்த ஞான நூல்களில் மெய்கண்ட தேவர் தமிழில் அருளிச் செய்த சிவஞான போதம் என்னும் அத்வைத ஞானசாஸ்திரமும் ஒன்ருகும்.

தற்காலத்தில் இலங்கையில் இந்நூல் கிடைப்பது மிகவும் அரிதாக இருத்தலின் ஞானசாதனையில் ஆர்வமுள்ள பல அன்பர்களுடைய வேண்டுகோளுக் கிசைந்து, இந்நூலை,

ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இயற்றிய தெளிபொருள் விளக்க உரையைத் தழுவி, ஓர் சிற்றுரையுடன் அச்சிட்டு வெளியாக்கியிருக்கிறேன். தமிழில் பாண்டித்தியம் இல்லாதவரும் இலகுவில் விளங்கக்கூடிய வகையில் இச்சிற்றுரையைக் குறிப்புடன் இணைத்திருக்கிறேன். அன்பர்கள் அமைதியுடன் இந்நூலைப் படித்து, ஞானசற்குருவிடம் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, நிட்டை கூடி நற்பயன் பெறுவார்களாக!

இங்ஙனம்
சி. அருணசலம்
(தாளையான் ஆத்மார்த்த
அந்தரங்கக் கூட்டத்தவர்.)

*178, டாம் வீதி,*
*கொழும்பு-12.*
*20–6–1971*



# சிவஞான போதச் சூத்திரம்.

சிவஞான போதத்தின் முன் ஆறுசூத்திரம் திருக்குத் திருசியங்களைப் பகுத்தறிதற்குரிய வகையினையும், பின் ஆறு சூத்திரம் சாதன சாத்தியங்களைப் பகுத்தறிதற்குரிய வகையினையும் கூறுதல்பற்றி, முன் ஆறுசூத்திரத்திற்கு திருக்குத் திருசிய விவேக இயல் என்றும், பின் ஆறுசூத்திரத்திற்கு சாதன சாத்திய விவேக இயல் என்றும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. திருக்கு என்பது அறிவு; திருசியம் என்பது அறிவினல் அறியப்படும் சடப்பொருள். இயல் என்பது பகுதி. சாதனம் என்பது பயனை அடைவதற்கு ஏதுவாகிய கருவி அல்லது பயிற்சி (ஈசுவரபக்தி, அடியார்பக்தி, ஆலய சேவை, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் முதலியனவாம்). சாத்தியமென்பது சாதனத்தால் பெறப்படும் பயன். (துக்க நிவிர்த்தியும் சிவானந்தப்பேறும்.)

## திருக்குத் திருசிய விவேக இயல்.

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனர் புலவர். (1)

அவையே தானே யாய்இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே. (2)

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா. (3)

அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே. (4)

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. (5)

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே. (6)

## சாதன சாத்திய விவேக இயல்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியா(து) அசத்தில தறியா(து)
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா. (7)



ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே. (8)

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழலாம் பதி, விதி எண்ணும்அஞ் செழுத்தே. (9)

அவனே தானே யாகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே. (10)

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே. (11)

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே. (12)

## 12 சூத்திரங்களின் சாராம்சம்.

(1) அறியப்படும் பிரபஞ்சம் (உலகம்) காரிய வடிவமாக இருத்தலின் அதற்குக் காரணகர்த்தா ஒருவர் உண்டென அனுமானப் பிரமாணத்தால் கூறல். அக்காரணகர்த்தா கடவுளாமெனல்.

(2) காரண கர்த்தாவாகிய இறைவன் வியாபகமாயிருந்து, சீவர்களுடைய கர்மங்களுக்கேற்றவாறு அவர்கள் சுகதுக்கங்களை அனுபவித்தற் பொருட்டு, தனது நியம சக்தியினால் முத்தொழிலைச் செய்து வருகிறானெனல்.

(3) காணப்பட்ட உடம்பு காரணமாகக் காணப்படாத ஆன்மாவின் உண்மையை அனுமானப் பிரமாணத்தால் கூறல்.

(4) அனுமானப் பிரமாணத்தால் துணியப்பட்ட ஆன்மா நினைவின் கூட்டுறவால் ஐந்தவஸ்தை உடையதாக இருக்கின்றதென்று அதன் இயல்பினைக் கூறல்.



(5) சீவர்கள் விஷயங்களைச் சுதந்தரமாய் அறிதலின்றி ஏகபரிபூரணமாய் விளங்குஞ் சிவத்தின் சந்நிதான விசேஷத்தால் அறிகின்றனர்.

(6) அறியப்படும் காரியமாம் உலகிற்கும், அறியப்படாத காரணமாம் மாயைக்கும் வேறாகச் சிவம் உள்ளதென்றும், அது சத்து, சித்து, ஆனந்த வடிவமாமெனல்.

(7) சிவம் தானேதானாய் இருத்தலின் எதையும் எதிரிட்டு அறிவதில்லையாம். உலகம் சடமாயிருத்தலின் எதையும் அறியாது. சிவத்தையும் உலகத்தையும் அறியும் அறிவு ஒன்று உளது. அஃது அவ்விரண்டுமல்லாத ஆன்மாவாம்.

(8) ஆன்மா தத்துவ ஞானத்தாலன்றிப் பிறிதொன்றால் சிவத்தை அடைவதின்றெனல்.

(9) சற்குருவின் கருணையால் சிவ சொரூபத்தை ஆன்மாவாகிய தன்னிடத்தில் அபேதமாக உணர்ந்து, இந்திரிய மனமுதலிய வற்றின் வயமாகாது தான்பெற்ற தத்துவ ஞானத்தைத் திடமாக்கிக் கொள்ளும் சாதனம் கூறல்.

(10) சிவ சொரூபத்தை ஆன்மாவாகிய தன்னிடத்தில் (அகத்தில்) உணர்ந்த முறைமை போல, ஆன்மாவாகிய தான் எங்கும் நிறைந்த சிவ சொரூபமாகிச் செயலனைத்தும் சிவச்செயலெனக் கண்டு நிற்கில் (பிறவிக்கேதுவாகிய) மும்மலமும் நீங்குமெனல்.

(11) தன்னைச் சிவமாகக் கண்டு தெளிந்த சீவன் முத்தன் செய்நன்றி மறத்தல் என்னும் குற்றம் தன்பால் நிகழாவாறு சற்குருமூர்த்தியினிடத்து பேரன்பு உடையவனுயிருந்து விதேகமுத்தியை அடைகின்ருனெனல்.

(12) மோட்சத்தை அடைதற்கு நேர் சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தைப் பெறுதற்குச் சாதனங்களைத் தொகுத்துக் கூறல்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞான போதம்

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

இதன் பொருள்

கல் ஆல் நிழல் — (கயிலாயத்திலே அருள் வடிவாகிய) கல்லால மரத்தின் நிழலின் கண் (எழுந்தருளியிருந்து) மலைவு இல்லார் — (நந்தி பெருமானுக்கு) மயக்கத்தைத் தீர்த்தருளிய முதலாசிரியராகிய சிவபெருமான், அருளிய — தந்தருளிய; பொல்லார் — (சுயம்பு மூர்த்தியாகிய) பொல்லாப் பிள்ளையாருடைய, இணைமலர் — இரண்டு தாமரை மலர் போன்ற திருவடிகளை, நல்லார்- (கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து சிவஞானத்தைப் பெற்ற) மெய்யன்பர்கள், புனைவர் — தலையில் சூட்டிக்கொள்வர். ஏ—அசை.

# சிவஞான போதம்

## நூல்

## திருக்குத் திருசிய விவேக இயல்

### முதற் சூத்திரம்

அவதாரிகை

உலகம் காரிய வடிவமாக இருத்தலின்
தனக்கொரு காரண கர்த்தாவாகிய
முதற்கடவுளை உடையதெனல்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென்மனார் புலவர். (1)

அந்வயம்

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.



குறிப்பு:-

திருக்குத் திருசிய விவேக இயல் என்பதில், திருக்கு என்பது அறிவு. அறிவு என்றாலும், ஞானம் என்றாலும், சேதனம் என்றாலும், அர்த்தம் ஒன்றே. திருசியம் என்பது அறியப்படும் பொருள். அறியப்படும் பொருள் சடம், சடப் பொருளெல்லாம் அறிவிற்கே தோற்றுகின்றது. இயல் என்பது பகுதி. திருக்கு என்பது எது, திருசியம் என்பது எது வென்று பிரித்து அறியும் பகுதி திருக்குத் திருசிய விவேக இயல் எனப்படும்.

என்றும் அழியாது உள்ள பொருள் நித்திய வஸ்து என்பர். அழிந்துபோகுந் தன்மையுடைய பொருள் அநித்திய வஸ்து என்பர். நித்திய அநித்திய வஸ்துக்களைப் பகுத்தறியுந் தன்மையை நித்திய அநித்திய வஸ்து விவேகமென்பர். இங்கு கூறப்பட்ட விவேகம் நித்திய அநித்திய வஸ்து விவேகத்தையே.

அவதாரிகை என்பது சூத்திரத்தின் அல்லது பாடலின் சுருங்கிய கருத்து. அந்வயம் அல்லது அன்னுவயம் பண்ணுதல் என்றால் பதங்களைப் பிரித்துப் பொருத்தமுறக் கூட்டுதல்.

அவை — தொகுதி அல்லது கூட்டம். மூவினை — மூன்று தொழில் (முத்தொழில்); அவையாவன படைத்தல், காத்தல், அழித்தல். வினைமை — வினையின் பயன் அல்லது பிரயோசனம். மூவினைமையின் — முத்தொழிலின் பயனையும் உடையதாய் இருத்தலின்.

உலகம் (பிரபஞ்சம்) தோன்றி நின்று அழிதலால் அது காரியப் பொருளாம். மண் காரணம், குடம் காரியம். அது போல உலகம் ஓர் காரியப் பொருளாயிருத்தலால் அதற்கு ஒரு காரணம் உண்டு என்று பெறப்படுகிறது.

முதற் சூத்திரத்தின் பொருள்

அவன் அவள் அது எனும் அவை—நம்மனோரால் அவன் என்றும் அவளென்றும் அதுவென்றும் சுட்டியறியப் படும் அவை (பிரபஞ்சத்தொகுதி) அனைத்தும்

மூவினைமையின்—படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலின் பயனையும் உறுதற்குரிய தாயிருத்தலின் (தனக்கு ஒரு காரண கர்த்தாவாகிய கடவுளை உடையதாம்)

தோற்றிய திதியே ஒடுங்கி — (பிரபஞ்சத் தொகுதியைத்) தோற்றுவிக்க அது தோன்றி நின்ற முறையே ஒடுங்கிப் போக (மீண்டும்) (திதி-இருப்பு; நிலை)

மலத்து—சீவர்களது கர்மமலங் காரணமாக,

உளதாம் —(அக்கடவுளினின்றும் அப்பிரபஞ்சத் தொகுதி போன்ற வேறொரு பிரபஞ்சத் தொகுதி) உண்டாவதாம்,

அந்தம் ஆதி—உலகத்தின் (பிரபஞ்சத் தொகுதியின்) ஒடுக்கத்திற்கும் தோற்றத்திற்கும் காரண கர்த்தாவாய் இருப்பவன் கடவுளாவன்,

என்மனார் புலவர்—என்று கூறுவர் வேதாகமங்களில் உள்ள பொருளை உள்ளவாறுணர்ந்த பெரியோர் (என்றவாறு).



அந்தம் ஆதி என்பன ஆகுபெயர். உலகம் ஒடுங்குதற்கும் மீண்டு தோற்றுதற்கும் காரண கர்த்தா (முதல் நடு ஈறு இல்லாப்) பரம்பொருள் என்பது கருத்து.

தோற்றிய என்பதற்குக் காரணகர்த்தா தோற்றுவிக்கத் தோன்றிய என்று பொருள் கொள்க. காரண கர்த்தா என்பதில், இங்கு காரணம் முதற் காரணமும், கர்த்தா நிமித்த காரணமுமாம். உலகம் தோன்றி நின்று ஒடுங்குதற்கு இறைவன் முதற் காரணமும் நிமித்த காரணமுமாக இருக்கின்றான்; சீவர்களது கர்மமலம் துணைக்காரணமுமாக இருக்கிறது.

பிரபஞ்சம் தோன்றி நின்ற முறையே ஒடுங்குதலென்பது, பிரபஞ்சம் எந்த முறையில் தோன்றி நின்றதோ அந்த முறையிலே ஒடுங்குதலாம்.

உலகம் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலின் பயனையும் உறுதற்குரியதாக இருத்தலின் காரியமாம். அதனால், தனக்கென்றொரு காரண கர்த்தாவாகிய கடவுளை உடையதாம். அது சீவர்களது கர்மங்காரணமாகத் தன் காரணத்தின்கண் தோன்றி நின்றவாறே ஒடுங்குவதாம். அக்காரணம் அக்கடவுளேயாமென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

காரணம் முதற்காரணமென்றும் நிமித்த காரணமென்றும் துணைக்காரணமென்றும் மூவகையாம்.

நிமித்த காரணம் — எது காரியத்தின் சொரூபத்தில் பிரவேசிப்பதில்லையோ, ஆனால், காரியத்திற்கு வேறுயிருந்து கொண்டு அதனைச் செய்கின்றதோ, எதன் நாசத்தால் காரியம் நாசமடைவதில்லையோ, அது நிமித்த காரணமாம்.

குடமாகிய காரியத்தைச் செய்யும் குயவன் குடத்திற்கு நிமித்த காரணமாக இருக்கின்றான். குடசொரூபத்தில் பிரவேசியாது அதற்கு வேறாகக் குயவன் இருக்கிறான். குயவன் வடிவத்திற்கும் குடத்தின் வடிவத்திற்கும் சம்பந்தமில்லை. குயவன் வடிவமும் குடத்தின் வடிவமும் வெவ்வேறாக இருக்கின்றன. இதுவே சொரூபத்தில் பிரவேசியாமை. குயவன் நாசத்தால் குடம் நாசமாகாதிருக்கின்றது.

முதற் காரணம் — எது காரியத்தின் சொரூபத்தில் பிரவேசிக்கின்றதோ, எஃதின்றிக் காரியத்தின் ஸ்திதி (அதாவது காரியத்தின் இருப்பு) இல்லையோ அது முதற் காரணமாம். முதற் காரணமென்றாலும் உபாதான காரணமென்றாலும் அர்த்தம் ஒன்றே.

குடமாகிய காரியத்திற்கு மண் முதற்காரணமாம். குடமாகிய காரியத்தில் மண்ணாகிய முதற்காரணம் பிரவேசித்திருப்பதும், மண்ணின் இருப்பாலேயே குடம் இருப்பதும் இங்கு உணர்தற் பாலனவாம்.

துணைக் காரணம் — தண்டுசக்கரம் முதலிய கருவிகளின் உதவியால் குயவன் குடமாகிய காரியத்தைச் செய்கிறான். ஆதலால் தண்டு சக்கரம் குடத்திற்கு துணைக்காரணமாம்.



சிலந்திப் பூச்சி தன்னிடத்துத் தோன்றும் நூலிற்குத் தானே முதற் காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருத்தல் போல, இறைவன் தன்னிடத்திற்றோன்றும் உலகத்திற்குத்தானே முதற் காரணமாகவும் நிமித்த சாரணமாகவும் இருக்கிறானென்புழி, சிலந்திப் பூச்சி தன்னிடத்திற்றோன்றும் நூலிற்கு ஜடப்பிரதானத்தால் (சரீரத்தினால்) முதற் காரணமாகவும், சித்துப்பிரதானத்தால் (சேதனத்தால்) நிமித்த காரணமாகவும் இருத்தல் போல, இறைவன் தன்னிடத்துத் தோன்றும் உலகத்திற்கு ஜடப்பிரதானத்தால் (மாயையினால்) முதற் காரணமாகவும், சித்துப்பிரதானத்தால் (சேதனத்தால்) நிமித்த காரணமாகவும் இருக்கின்றானென்பது உணரப்பாற்றும்.

சேதனம் (அறிவு) மாயாரகிதமாயுள்ளபோது சிவம் என்றும், மாயா சகிதமாயுள்ளபோது சிவன் என்றும் சாஸ்திரங்களாற் கூறப்படுகிறது.

நம்மிடத்திற் றோன்றி நின்றழியும் சொப்பன உலகிற்கு நாமன்றோ முதற் காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கின்றோம். இங்ஙனம் இருத்தல் மிகு பிரசித்தமாமன்றோ? இங்ஙனமே இறைவன் உலகத்திற்கு முதற் காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கின்றான் என்பது சுருதி யுத்தி அனுபவங்களோடு மாறுபாடின்றிய தீர்மானமாம்.

இச்சூத்திரம் இறைவன் உலகத்திற்கு அந்தமும் ஆதியுமாக இருக்கிறான் என்று முடிவு கூறினமையின் இறைவன் உலகத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரணமாய் இருக்கின்றான் என்பது அதனது துணிபா மென்பது பெறப்பட்டவாறறிக.

*(1) "அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்" என்பதனுல் உலகிற்கொரு காரண கர்த்தா உண்டென்றும் (2) "தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்" என்பதனுல் உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதற்கு காரணம் சீவர்களது கர்மமன்றிப் பிறிதொன்றன்று என்றும் (3) "அந்த மாதி" என்பதனுல் உலகத்திற்கு இறைவன் முதற் காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கின்ருன் என்றும் இச்சூத்திரம் விளக்கியவாருும்.*

## இரண்டாஞ் சூத்திரம்

### அவதாரிகை

*தனது காரியமாய உலகமனைத்தும் தானேயாயுள்ள காரண கர்த்தாவாகிய இறைவன் சீவர்கள் தமது கர்மங்களுக்கேற்றவாறு சுகதுக்கங்களை அநுபவித்தற்பொருட்டு, அவற்றை அவர்தம் கர்மங் காரணமாகவே தனது நியம சக்தியினுல் படைத்துக் காத்து அழித்து வருகின்ருன் எனல்.*

**அவையே தானே யாயிரு வினையின்**
**போக்கு வரவு புரிய வாணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே.** **(2)**



### அந்வயம்

அவையே தானேயாய் இருவினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

குறிப்பு:-

*அவை — பிரபஞ்சத் தொகுதி. தானேயாய் — இறைவனுக்கு அன்னியமில்லாததாய். இருவினை — நல்வினை தீவினை. வினை என்ருலும், தொழில் என்ருலும், கர்மம் என்ருலும் அர்த்தம் ஒன்றே. நல்வினையின் பயன் புண்ணியம்; தீவினையின் பயன் பாவம். இருவினையின் — இருவினை காரணமாக. போக்கு—போகுதல்; அதாவது இறத்தல். வரவு — வருதல் அதாவது பிறத்தல். புரிய—செய்ய. ஆணை என்றது இறைவனின் நியம சக்தி. ஆணையின்--நியம சக்தியினுல். நீக்கமின்றி--பிரிவின்றி, வியாபகமாய். அன்றே — அசைநிலை.*

### இரண்டாஞ் சூத்திரத்தின் பொருள்

*அவையே தானேயாய் — அவன் அவள் அது என்னும் பிரபஞ்சத்தொகுதி அனைத்தும் இறைவனின் காரியமாயிருத்தலின் இறைவன் அன்னியமில்லாது இருக்கிருன்.*
*நீக்கமின்றி நிற்கும் ஆணையின் — தன்னிடத்துப் பிரிவின்றி உள்ள ஆணையாகிய நியம சக்தியினுல்,*

இருவினையின் போக்கு வரவு புரிய (நீக்கமின்றி) நிற்கும் —
சீவர்களது இருவினை காரணமாக அவரவர்கள் போதலையும் வருதலையும் (இறத்தலையும் பிறத்தலையும்) செய்ய இறைவன் பூரணமாக நிறைந்து இருக்கின்றான்.
அன்றே என்பது அசை.

இறைவன் தனது மாயை காரணமாகப் பிரபஞ்சத் தொகுதிக்கு அபேதமாகவிருக்கிறான். சேதனம் காரணமாக விகாரமில்லாது வேறாக இருக்கிறான். இறைவன் சீவர்களது கர்மங் காரணமாகத் தனது நியம சத்தியினால் உலகத்தைப் படைத்துக் காத்து அழித்து வருகின்றான் என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம். (சேதனம் — அறிவு).

இறைவன் அநாதியாயுள்ள சீவர்களது கர்மபரிபாகத்தை அனுசரித்து, தனது நியம சத்தியினால் தன்னினின்றும் உலகத்தை முன்போலத் தொடர்ச்சியாகப் படைத்துக் காத்து அழித்து வருதலால், உலகம் முன்போலத் தன்காரணத்தில் தோன்றி நின்று அழிந்து வருவதாய் இருக்கிறது. சீவர்கள் தமது எதார்த்த சொரூபத்தைச் சிவசொரூபமாந் தேசிகர் அருளால் உள்ளவாறு உணர்ந்து உணர்ந்தவாறு இருத்தலைப் பெறுதளவும் போதலாகிய இறத்தலையும் வருதலாகிய பிறத்தலையும் உடையவரா யிருக்கின்றனர். இறத்தலாவது சீவன் தனக்குக் கருமவயத்தாற் கிடைத்த உடம்பை விட்டு நீங்குதலாம். பிறத்தலாவது அவன் தனக்குக் கருமவயத்தாற் கிடைத்த பிறிதோர் உடம்போடு கூடுதலாம்.



## மூன்றாஞ் சூத்திரம்

### அவதாரிகை

சரீர இந்திரிய முதலியவற்றிற்கு வேறாய் அவற்றை அறியும் ஆன்மா ஒன்று உளதென அனுமானப் பிரமாணத்தால் கூறல்.

**உளதில தென்றலி னெனதுட லென்றலின்**
**ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்**
**உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்**
**மாயா வியந்திர தனுவினு ளான்மா. (3)**

### அந்வயம்

இலது என்றலின் ஆன்மாவுளது,
எனது உடல் என்றலின் ஆன்மாவுளது,
ஐம்புலன் அறிதலின் ஆன்மாவுளது,
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் ஆன்மாவுளது,
கண்படில் உண்டிவினை இன்மையின் ஆன்மாவுளது,
உணர்த்த உணர்தலின் ஆன்மாவுளது,
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மாவுளது.

குறிப்பு:-

உளது என்பது ஆன்மா உள்ளது எனப் பொருள் கொள்க. ஆன்மா எழுவாய், உள்ளது பயனிலை. ஐம்புலன் ஒடுக்கம் சொப்பனத்தில் நிகழ்கிறது.

கண்படில் — கண்படுதல் அதாவது உறங்குதல் (சுழுத்தி நிலை). அந்தக்கரணத்தின் (மனத்தின்) ஒடுக்கம் சுழுத்தியில் நிகழ்கிறது. சுழுத்தி என்பது கனவற்ற உறக்கம்.

உண்டிவினை — உண்டியும் வினையும். உண்டி என்பது புசிப்பு, அதாவது இன்பதுன்ப நுகர்ச்சி. வினையென்பது உடம்பின் தொழிற்பாட்டை. தனு — உடம்பு. உடம்பு இயந்திரத்திற்குச் சமானமானது. மாயையினால் செய்யப் பட்ட காரியம்.

மூன்றாஞ் சூத்திரத்தின் பொருள்

மாயா இயந்திர தனுவினுள் — மாயையின் காரியமாய்ச் சூத் திரப் பாவைபோலுள்ள உடம்பின்கண்,

இலது என்றலின் — நான் என்னும் ஒரு பொருள் உடம்பு முதலியவற்றிற்கு வேறாகவேனும், உடம்பு முதலியன வாகவேனும் இல்லையென்று கூறும் பொருள் ஒன்று இருத்தலின்,

ஆன்மா உளது — அவ்வில்லையென்னும் சூனியத்திற்கு வேறாக ஆன்மா இருக்கிறது,

எனதுடல் என்றலின் — என்னுடைய உடம்பென்று வேற் றுமை தோன்றக்கூறும் பொருள் ஒன்று இருத்தலின்,

ஆன்மா உளது — அவ்வுடம்பினும் வேறாக ஆன்மா இருக் கிறது,

ஐம்புலன் அறிதலின் — ஐம்புலன்களையும், (ஞானேந்திரியங்க ளையும் கன்மேந்திரியங்களையும்) அறிகிற பொருள் ஒன்று இருத்தலின்,



ஆன்மா உளது — அங்ஙனம் அறியப்படும் பொருள்களுக்கு வேறாக ஆன்மா இருக்கிறது,

ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் — சொப்பனத்தில் ஐம்புலன் முதலியவற்றின் ஒடுக்கத்தை அறியும் பொருள் ஒன்று இருத்தலின்,

ஆன்மா உளது—ஐம்புலன் முதலியவற்றிற்கு வேறாக ஆன்மா இருக்கிறது,

கண்படில் உண்டிவினை இன்மையின் — உறங்குதலென்னும் சுழுத்தியின்கண் பிராணவாயு இயங்கிக் கொண்டிருந்தும் சுகதுக்க அனுபவமும் அதற்கேற்ற செயல்களும் அதற்கு இல்லாமையால்,

ஆன்மா உளது — அப்பிராணவாயுவிற்கு வேறாக ஆன்மா இருக்கிறது,

உணர்த்த உணர்தலின் — சாக்கிரத்தில் ஞானசற்குரு ஆன் மாவின் நிலையை உணர்த்த ஆன்மா தன்னிலையை உணர்தலால்,

ஆன்மா உளது — ஆன்மா இருக்கிறது (எ—று)

மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா இலதென்றலினா லும், ஐம்புலனை அறிதலினாலும், ஐம்புலன் ஒடுக்கத்தை அறிதலினாலும், கண்படில் உண்டிவினை யின்மையினாலும், உணர்த்த உணர்தலினாலும், தேகேந்திரிய முதலியவற்றிற்கு வேறாக ஆன்மா உளதென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்று கூறியதினுல் தேகம் வேறு தேகி வேறு என்பன பெறப் படுவனவாம்; வீடும் அதன்கண் இருப்பவனும் ஒன்ருகாமை போல, தேகமும் அதன்கண் இருக்கும் தேகியும் ஒன்ருவதில் லையாமென்க. (தேகி — தேகத்துக்குள் இருக்கும் உயிர்). உண்டிவினை உம்மைத் தொகைநிலைத் தொடர்; உண்டியும் வினையும் என விரிதலின். "கண்படில் உண்டி வினையின்மை யின்" என்பதனுல் ஆன்மா சுழுத்தியின்கண் தேகேந்திரிய கரணங்களின் சம்பந்தமின்றிச் சுகவடிவமாகவே யிருக்கின்ற தென்பது குறிப்பாகப் பெறப்படுவதாம்

முதற் சூத்திரம் காணப்பட்ட பிரபஞ்சங் காரணமாகக் காணப்படாத இறைவனின் உண்மையை உணர்த்தினுற் போல, இச்சூத்திரம் காணப்பட்ட உடம்பு காரணமாகக் காணப்படாத ஆன்மாவின் உண்மையை உணர்த்தியதென இங்குணர்தல் வேண்டும்.

இலதென்றலின் முதலிய ஐந்தேதுக்களுள், (1) இலதென் றலின் என்பது சூனியாத்ம வாதியையும், (2) எனதுடலென் றலின் என்பது தேகாத்ம வாதியையும், (3) ஐம்புலனெடுக்க மறிதலின் என்பது இந்திரியாத்ம வாதியையும், (4) கண்ப டில் உண்டிவினை யின்மையின் என்பது பிராணுத்ம வாதியை யும், (5) உணர்த்த உணர்தலின் என்பது அஞ்ஞானுத்ம வாதியையும் மறுத்து, மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளதென்று சாதித்து நின்றன; நிற்கவே ஒவ்வோர் ஏதுவும் ஒவ்வொரு மதம் பற்றிக் கூறப்பட்டதென்பது விளங்குவ தாம்.



இதனுல் சூனியம் ஆன்மாவன்று; தேகம் ஆன்மா அன்று; இந்திரியம் ஆன்மாவன்று; பிராணன் ஆன்மாவன்று; அஞ்ஞானம் ஆன்மாவன்று என்பது பெற்ரும். இவற்றுள், ஐம்புலனெடுக்க மறிதலின் என்பதனுல் சொப்பனத்திலும், கண்படில் உண்டிவினை யின்மையின் என்பதனுல் சுழுத்தியி லும், உணர்த்த உணர்தலின் என்பதனுல் சாக்கிரத்திலும் ஆன்மா மாருதிருக்கின்ற தென்பது பெறப்படுவதாம்; அங்ஙனம் பெறப்படவே, மனமே ஆன்மாவென்பதும், புத் தியே ஆன்மாவென்பதும், அகங்காரமே ஆன்மாவென்பதும் மறுக்கப்பட்டனவென்க. மனமுதலியன சுழுத்தியில் இந்திரி யங்களைப்போல ஒடுங்குதல் மிகுபிரசித்தமாம்.

இந்திரியவொடுக்கமுள்ள காலம் சொப்பனமாம், அத ளுேடு அந்தக்கரண வொடுக்கமுமுள்ள காலம் சுழுத்தியாம். இவ்விரண்டும் ஒடுங்காதுள்ள காலம் சாக்கிரமாம்.

சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலிய நிலைகளையும் அவற்றின் மாற்றங்களையும் வேருகவிருந்துகொண்டு அறிவது ஆன்மா. மேற்கூறியவற்றை ஆன்மா அறிதலால் ஆன்மா அறிவு சொரூபம்.

ஆன்மா தனது கற்பிதமான அவித்தையின் சம்பந் தத்தால் கர்த்தா போக்தாவாக விளங்குதல் அதற்குத் தடத்த லட்சணமாமென்றும், யதார்த்தத்தில் அதுயாதொரு தர்மமுமின்றிப் பரமானந்த போத சொரூபமாகவே விளங் குதல் அதற்குச் சொரூப லட்சணமாமென்றும் இங்குணர்தல் வேண்டும்.

## நான்காஞ் சூத்திரம்

அவதாரிகை

மாயா இயந்திர தனுவினுள் உளது என்று அனுமானப் பிரமாணத்தால் துணியப் பட்ட ஆன்மா அதனுள் பஞ்சாவஸ்தை உடையதாக இருக்கின்றதென்று அதன் இயல்பினைக் கூறல்.

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே. (4)

அந்வயம்

ஆன்மா அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று சகச மலத்து உணராது, அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்தது நின்று அஞ்சு அவத்தைத்தே

குறிப்பு:-

அந்தக்கரணம் (உட்கருவி) என்பது நினைவு (அந்தர்—உள்; கரணம்-கருவி). நினைவின் செயலை முன்னிட்டு அந்தக் கரணம் நான்கென்பர்; அவையாவன மனம், புத்தி, சித்தம் அகங்காரமாம்.



சகசமலம் என்பது ஆணவம். வியாபகமான ஆன்மாவை அணுப்போலக் கற்பிதமாகக் காட்டுதலின் ஆணவம் என்னும் பெயர்வந்தது. சகச மலத்து உணராது — சகச மலம் காரணமாக உணராது.

அமைச்சு அரசு ஏய்ப்ப—மந்திரிமார்களோடுகூடி நின்ற அரசனைப் போல. (ஏய்ப்ப—போல.) அவை-அந்தக்கரணங் களுடன்; சந்தித்தது நின் று-கூடிநின் று. அஞ்சு அவத்தைத்து-ஐந்து அவஸ்தை உடைத்தாம். அவஸ்தை என்பது நிலை, அதாவது உயிரின் நிலை. அந்தக்கரணத்தின் கூட்டுறவால் ஆன்மாவுக்கு ஐந்தவஸ்தை உண்டாகிறதென்பது கருத்து.

### நான்காஞ் சூத்திரத்தின் பொருள்

ஆன்மா அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று — ஆன்மா அந்தக்கரணமாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்நான்கனுள் ஒன்றன்றும்,

சகச மலத்து உணராது — ஆணவமென்னும் சகச மலத்தினால் ஆன்மா தனது நிச வடிவத்தை அறியாது, (அங்ஙனம் அறியாதிருத்தலால்)

அரசு அமைச்சு ஏய்ப்ப — அரசன் அமைச்சரோடு கூடிநின்று நாட்டின் செய்திகளை அவர்கள் மூலம் அறிதல்போல,

அவை சந்தித்தது நின்று — (ஆன்மா) அம்மனம் முதலியவற் றினோடு கூடிநின்று,

அஞ்சு அவத்தைத்து — சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவஸ்தைகளை உடையதாய் இருக்கின்றது. (எ—று)

மாயா இயந்திர தனுவினுள் உளது என்று அனுமானப் பிரமாணத்தால் துணியப்பட்ட ஆன்மா சூனியம், உடம்பு இந்திரியம், பிராணவாயு, அஞ்ஞானம் என்பனவற்றிக்கு வேறுயிருத்தல்போல, அந்தக்கரணத்திற்கும் வேறுயிருப்பி னும், சகசமலத்தால் தனது நிசவடிவத்தை அறியாது. அங்ஙனம் அறியாதிருப்பது காரணமாக அவ்வந்தக் கரணங் களோடு கூடிநின்று சாக்கிரம் முதலிய அவஸ்தை ஐந்தனை யும் உடையதாய் இருக்கின்றது. அரசன் மந்திரிகளோடு கூடிநின்று அவர்கள் வாயிலாக இராச காரியங்களை அறி வதுபோல ஆன்மா மனோவிருத்தியினுல் விடையங்களை அறி கின்றதென்பது இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

சந்தித்தது என்பது முற்றெச்சம். சகசமலத்துணராது என்பது மூன்றும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். ஏ—ஈற்றசை.

ஆன்மா சாக்கிர முதலிய அவஸ்தைகளை அடைதலும் அதற்குத் தடத்த இலக்கணமாம். மூன்ருவது சூத்திரத்தில் ஆன்மாவின் தடத்த இலக்கணம் கூறப்பட்டதாயினும், அஃது அந்தக்கரணத்தின் வேருய் ஐந்தவஸ்தைகளை உடையதாய் இருக்கிறதென்பது ஆண்டுப் பெறப்படாமையின், ஈண்டு அவ்விலக்கணம் கூறப்பட்டதென்க.



அந்தக்கரணம் விஷயத்தை நினைக்குமிடத்து மனமென் றும், நிச்சயிக்குமிடத்து புத்தியென்றும், சிந்திக்குமிடத்துச் சித்தமென்றும், அபிமானிக்குமிடத்து அகங்காரமென்றும் செயலை முன்னிட்டு இப்பெயர்கள் வந்தன என்று உற்று ணர்தல் வேண்டும். நினைவு ஆன்மாவின் சலனசக்தி என்று அறிஞர் கூறுவர்.

ஆகாயத்தின்கண் நீலநிறம் உற்பத்தியின்றிக் கற்பனையா யிருத்தல்போல, ஆன்மாவின்கண் ஆணவமலம் கற்பனையாக இருத்தலின் சகசமலமென்று கூறப்படுகின்றது. சகசம் என்பது இயற்கை. இம்மலம் ஆன்மாவின்கண் ஜீவனென் னும் வியவகாரம் உள்ளளவும் இருப்பதாம். எங்ஙனம் ஆகாயத்தில் நீலநிறம் பார்வைக்கு உண்மைபோல் தோன் றுகின்றதோ, அதுபோல் ஆணவமலமும் அவிவேகத்தால் உண்மைபோல் தோன்றுகின்றது. வியாபகமாகிய உயிரை அணுத்தன்மை போலக் கற்பனையால் தோன்றச் செய்தலின் ஆணவம் என்னும் பெயர் வந்தது. ஆன்மா தனது நிச வடிவை உணராது மறந்த மறதியே அஞ்ஞானமென்றும் ஆவரணமென்றும், ஆணவமென்றும் கூறுவர். இது எதார்த் தத்தில் உண்மையான பண்டமன்று. பொருளல்லவற்றைப் பொருளென உணருவதால் வந்த ஒரு பெரிய மயக்கம்.

ஆன்மா தனதுண்மையை மறந்து அந்தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிரம் முதலிய அவஸ்தைகளை அடைந்து, அவ்வவஸ்தைக் கேற்ப இருக்கின்ற தென்பதும், ஆன்மா

அரசன்போலவிருந்து அந்தக்கரணங்களை அமைச்சர்போலக் கொண்டு சாக்கிரம் முதலிய அவஸ்தைகளை உடையதாய் வருகிறதென்பதும் நன்கு விளங்குவனவாம்.

சாக்கிர முதலிய ஐந்தவஸ்தைகளுள் சாக்கிரமும் சொப்பனமும் சகல நிலையென்றும், சுழுத்தி கேவல நிலையென்றும், துரியமும் துரியாதீதமும் சுத்தநிலையென்றும் சொல்லப்படுகின்றன. இவற்றுள் சுத்தநிலை பெற்றவர்க்கே பிறவி வருவதில்லையாம். இச்சுத்தநிலையைப் பற்றிப் பின்வருமாறு தாயுமானசுவாமிகள் திருவாய் மலர்ந்திருக்கிறார்கள்.

## நேரிசை வெண்பா

சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற் — சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமல்
கற்றோமே மோனக் கரு.

கருத்து:—

அறிவும், (அறிவினால் அறியப்படும்) சடப்பொருளுமாகிய இவையிரண்டும் சிவசொரூபத்துக்கு அன்னியமாகவில்லையென்று உபதேசித்த நித்தியனாகிய பரமகுருவின் அனுக்கிரகத்தினால் சுத்தநிலையை யடைந்தோம். மனமே! பெரிய துன்பத்தைத் தரும் பிறப்பினை மேலும் அடையாமல் மோனநிலையை அநுபூதியால் தெரிந்துகொண்டோம்.

சிவசொரூபம் எல்லாமாய் அல்லதுமாய் இருத்தலின் சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட இல்லையென்றார்.



# ஐந்தாஞ் சூத்திரம்

### அவதாரிகை

சீவர்கள் விஷயங்களைச் சுதந்தரமாய் அறிதலின்றி ஏகபரிபூரணமாய் விளங்கும் சிவத்தின் சந்நிதான விசேஷத்தால் அறிகின்றனரெனல்.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்விற் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

### அந்வயம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண் மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாம் தம் உணர்வில் தமியருள்
காந்தங் கண்ட பசாசத்து அவையே.

குறிப்பு:-

விளம்பிய — சொல்லிய. உள்ளத்து — உயிர்களால் அல்லது சீவர்களால். அளந்து அறிந்து — அளவிட்டு அறிந்து.

அவைபோல — அவ்விந்திரியங்கள் போல. தமி — தனிமை (சிவம்). தமியருள் — எங்கும் நிறைந்த சிவத்தின் சந்நிதான விசேஷத்தினுல் (திருவருளினுல்). பசாசம் — இரும்பு. உணர்வில் — அறிவதில்லை. (இல் — எதிர் மறைக் குறிப்பு வினைமுற்று). ஆங்கு — அசை நிலை.

## ஐந்தாஞ் சூத்திரத்தின் பொருள்

விளம்பிய உள்ளத்து — முன்னர் கூறிய சீவர்களால் தொழிற் படும்

மெய் வாய் கண் மூக்குச் (செவி) — மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஞானேந்திரியங்கள்,

அளந்து அறிந்து அறியா — தத்தமக்குரிய விஷயங்களை இஃது இத்தன்மையதென்று அளவிட்டு அறிந்து வருகின்றனவேயன்றித் தாமே (இந்திரியங்களே) சுதந்திரமாக அறிவதில்லையாம்,

அவை போல — (சுதந்திரமாக அறியுமியல்பில்லாத) அவ் விந்திரியங்கள் போல,

அவை தம் தமியருள்—அச்சீவர்களும் ஏகமாயுள்ள சிவத்தின் சந்நிதானத்தால் (அறிந்து வருகின்றனரேயன்றி),

தாம் தம் உணர்வில் — தாம் தாமே சுதந்தரமாக அறிவதில்லையாம், (சிவத்தின் சந்நிதானத்தால் சீவர்கள் விஷயங்களைச் சுதந்தரமின்றி அறிதல் எவ்வாறெனில்)

காந்தங் கண்ட பசாசத்து — காந்தத்தைக் கண்ட இருப்புகள் சேட்டிக்கும் தன்மை போல்வதாம்.



உள்ளத்து — உள்ளத்தால் (உயிரால்). செவி யென்பது சொல்லெச்சமாம். இல் என்பது எதிர்மறைப் பொருளைத் தரும் குறிப்பு வினைமுற்று. உணர்வில் — உணர்வதில்லை. தமி — தனிமை (இங்கு அத்தனிமையாயுள்ள சிவத்தை உணர்த்தி நின்றது). தமியருள் — திருவருள். (திருவருள் உணர்த்தச் சீவர்கள் உணருகிறுர்கள்) காந்தத்தின் சந்நிதான மாத்திரத்தால் இரும்புகள் அசையுமியல்புடையதாதல் போல, சிவத்தின் சந்நிதான மாத்திரத்தால் சீவர்களும் விஷயங்களையறியும் இயல்புடையவராகின்றனரென்பது இவ் வுவமையின் விளக்கமாம்.

இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களைச் சீவர்களால் அறிகின்றனவன்றித் தாமே சுதந்தரமாக அறிவதில்லையாம். அவ்விந்திரியங்களைப் போலச் சீவர்களும் விஷயங்களைச் சிவத்தால் அறிகின்றனரன்றித் தாமே சுதந்தரமாக அறிவதில்லையாம். காந்தக் கல்லின் சந்நிதானத்தால் இருப்புகள் அசையும் இயல்புடையனவாதல் போல, சிவத்தின் சந்நிதானத்தால் சீவர்கள் விஷயங்களை அறியும் இயல்புடையராகின்றனர். இரும்புகள் அசைவதற்குக் காந்தக்கல் காரணமாயிருந்தும் அது செய்வதும் செய்விப்பதுமாகிய விகாரமடையாதிருப்பதுபோல, சீவர்கள் விஷயங்களை அறிவதற்குச் சிவம் காரணமாயிருந்தும், அது செய்வதும் செய்விப்பதுமாகிய விகாரமடையாதிருக்கிறது என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

சீவர்களை நோக்க இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் சுதந்தரமில்லாதிருத்தல் போல, சிவத்தை நோக்கச் சீவர்களும் சுதந்தரமில்லா திருக்கின்றனரென்பதன்றி, அவர்கள் (சீவர்கள்) இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் போலச் சடமாயிருக்கின்றனரென்பதன்றும். சீவர்கள் என்றும் சித்துருவமே, "உணர்த்த உணர்தலின்." சீவர்கள் சுகதுக்கம் முதலியவற்றைப் புத்தி முதலியவற்றல் அறிவதற்குச் சிவத்தின் சந்நிதான விசேடம் காரணமா யிருக்கின்றதென்பது இங்குணர்தற்பாற்றும்.

சப்த முதலிய விஷயங்களை இந்திரியங்கள் விளக்குகின்றன. இந்திரியங்களை அந்தக்கரணங்கள் விளக்குகின்றன. அந்தக்கரணங்களைச் சீவன் விளக்குகின்றான். சீவனைச் சிவம் விளக்குகின்றது. விஷயம் இந்திரியத்தையும், இந்திரியம் அந்தக்கரணத்தையும், அந்தக்கரணம் சீவனையும், சீவன் சிவத்தையும் எதிரிட்டு விளக்குவதில்லையாம். சிவம் தனக்கு மேற்பட்ட தொன்றின்றிச் சுயம்பிரகாசமா யிருத்தலின், அதனை விளக்குவதொன்றில்லையாம். அதுவே சுதந்தர ஞான சொரூபமாயிருப்பதாம்; அதன் சந்நிதானத்திலே "காந்தங் கண்ட பசாசம்" போல இந்திரிய முதலியவனைத்தும் தத்தம் வியாபாரங்களைச் செய்கின்றன வென்பதை அதிகாரி புருஷர்க்கு உணர்த்துதற் பொருட்டு இச்சூத்திரம் கூறப்பட்டதென்க.



## ஆறுஞ் சூத்திரம்

### அவதாரிகை

காரியமாய உலகத்திற்கும் அதன் முதற் காரணமான மாயைக்கும் விலட்சணமாய் (வேறாக) உள்ள சிவத்தின் சொரூப இலக்கணங் கூறல்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே. (6)

### அந்வயம்

உணருரு எனின் அசத்து, உணராது எனின்
இன்மையின், இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே.

குறிப்பு:-

உணர் உரு எனின்-அறியப்படும் வடிவமாமெனின். அசத்து—உலகம். உணராது எனின்-அறியப்படாத பொருளாமெனின். இன்மை—சூனியமே தனக்கு வடிவமாயுள்ள மாயை. இருதிறன்-இரண்டு பகுதி. இரண்டுவகையின் இசைக்கும் — இரண்டு ஏதுக்களாலும் கூறுவர்.

## ஆறாஞ் சூத்திரத்தின் பொருள்

மன்னுலகு—நிலைபெற்ற மெய்யுணர்வினை உடைய பெரியோர்,
(சிவம்) உணர் உருவெனின் — சிவம் சுட்டி அறியப்படுவ
தாகிய பொருளாமெனின்,
அசத்து — அசத்தாகிய உலகமாம்,
(சிவம்) உணராதெனின்—சிவம் அறியப்படாத பொருளா
மெனின்,
இன்மையின் — சூனியப் பொருளாகிய மாயையாம்,
அதனால்,
இருதிறன் அல்லது சிவசத்தாம் என—இவ்விரண்டு பகுதியும்
(உலகமும் சூனியமும்) அல்லாத பொருள் சத்ரூப
சிவமாம் என்று,
இரண்டு வகையின் இசைக்கும் — இவ்விரண்டு ஏதுக்களாலும்
கூறுவர்.

சிவம் இன்ன தன்மைய தென்று குறித்தறியப்படும் பொருளாமெனின் உலகமாம். (உலகம் சடமாதலின் சிவமல்ல). இன்ன தன்மையதென்று அறியப்படாத பொருளாமெனின் சூனியமாகிய மாயையாம். (சூனியம் சடமாதலின் சிவமல்ல). சிவம் அவ்விரண்டிற்கும் வேறாய்ச் சச்சிதாநந்த வடிவமாயிருக்கின்ற தென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.



இருதிறன் அல்லது — இவ்விரு பகுதியும் அல்லாத.
இரண்டு வகையின் — இவ்விரண்டு ஏதுக்களாலும்.
வகை—ஏது அல்லது காரணம். உணராதது என்பது செய்யுள் விகாரத்தால் உணராது எனவந்தது. எனின் என்பது உணராது என்பதனோடுஞ் சென்றியைந்து நின்றது. உலகு என்பது இங்கு உயர்ந்தோரை. சிவம் சத்தாம் எனக்கூறப்பட்டதாயினும், இனம் பற்றி அது சித்தும் ஆநந்தமுமாமெனக் கொள்க. சிவம் சச்சிதாநந்த வடிவமாயிருக்கின்ற தென்பது அதன் சொரூப லட்சணமாம்.

# சாதன சாத்திய விவேக இயல்

## ஏழாஞ் சூத்திரம்

### அவதாரிகை

மாயாப் பிரபஞ்சமும் சிவமும் மோட்சமடைதற்குரியன அன்றாகலின், மோட்சத்தை அடைதற்குரிய ஆன்மா அவ்விரண்டிற்கும் வேறாயுண்டெனல்.

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிற னறிவுள திரண்டலா வான்மா. (7)**

அந்வயம்

யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்து இலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா (த) ஆன்மா

குறிப்பு:-

யாவையும் — சர்வபதார்த்தமும் (சுட்டியறியப்படும் உலகமும், சுட்டியறியப்படாத மாயையும்.)
சூனியம் — பாழ். சத்தெரிர் — சிவசத்தின் சந்நிதானத்தில். ஆகலின் — அதனுல். இருதிறன் அறிவுளது — இவ்விரண்டு வகையினையும் அறியும் அறிவு ஒன்று இருக்கிறது. அவ்வறிவே ஆன்மாவாம்.

ஏழாஞ் சூத்திரத்தின் பொருள்

யாவையும் சத்து எதிர் சூனியம் — சுட்டியறியப்படும் உலகமும் சுட்டியறியப்படாத மாயையும் சிவசத்தின் சந்நிதானத்தில் (வெறும்) பாழாம்,

ஆகலின் சத்து அறியாது — அதனுல் சத்ரூபமான சிவம் (எதையும் எதிரிட்டு) அறிவதில்லையாம்,

அசத்து (அறிவு) இலது அறியாது — அசத்தாகிய உலகம் அறிவு இல்லாத சடமாதலால் சிவத்தை அறிவதில்லையாம்.

(ஆனல்) இருதிறன் அறிவுளது (அஃது) இரண்டலா(த) ஆன்மா — சத்தாகிய சிவம், அசத்தாகிய உலகம் இவ்விரண்டினையும் அறியும் அறிவொன்றிருக்கின்றது. அது சத்தாகிய சிவம், அசத்தாகிய உலகம் என்னும் இவ்விரண்டும் அல்லாத ஆன்மாவாம்.



சிவம் தானேதானய் இருத்தலின் எதையும் எதிரிட்டு அறிவதில்லையாம். அசத்தாகிய உலகம் சடமாயிருத்தலின் சிவத்தை அறிவதில்லையாம். அவ்விரண்டையும் அறியும் அறிவொன்றுளது, அஃது அவ்விரண்டுமல்லாத ஆன்மாவாம். அதுவே சாஸ்திர பலமாகிய மோட்சமடைதற்கு உரியதாமென்பது இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

(இரண்டு) அலாத என்பது ஈறு கெட்டு அலா என்று வந்தது. இருதிறனும் (அறிவுளது) இரண்டும் (அலாத ஆன்மா) — சூத்திரத்தில் முற்றும்மைகள் இரண்டும் தொக்கு நின்றன.

பதி (சிவம்) சத்தாயும், பாசம் (பிரபஞ்சம்) அசத்தாயும் இருக்குமாயின், பசு (ஆன்மா) இவ்விரண்டனுள் ஒன்ருமோ வேருமோ என்னும் ஐயப்பாட்டை ஒழித்தற் பொருட்டு இச்சூத்திரம் பதியின் இயல்பையும், பாசத்தின் இயல்பையும், பசுவின் இயல்பையும் வரையறைசெய்து கூறியதென்க. இதனுல் சத்தாயிருப்பது பதி, அசத்தாயிருப்பது பாசம், சத்து அசத்து இரண்டிற்கும் வேருக இருப்பது பசு என்னும் சித்தாந்தம் பெறப்பட்டவாறறிக.

மாயையால் சீவர்கள் சிவத்திற்கு வேருக இருப்பவர் போல விளங்குகின்றனர்; தத்துவ ஞானத்தால் மாயை நீங்கியபோது அவர்கள் சிவ சொரூபமாகவே விளங்குகின்றனர்.

## எட்டாஞ் சூத்திரம்

### அவதாரிகை

ஆன்மா தத்துவ ஞானத்தாலன்றிப் பிறி
தொன்றால் சிவத்தை அடைவதின்றெனல்

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே. **(8)**

### அந்வயம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

குறிப்பு:-

ஐம்புலவேடரின்—ஐந்து இந்திரியங்களாகிய வேடரோடு. வளர்ந்து அயர்ந்தனையென — வளர்ந்து வருதலால் மயங்கி இடர்ப்பட்டு இருக்கின்றாய் என்று. விட்டு — (ஐம்புல வேடரோடு கூடி வளர்ந்து வருதலை) ஒழித்து.

### எட்டாஞ் சூத்திரத்தின் பொருள்

தவத்தினில் தம்முதல் குருவுமாய் — முன் செய்த தவ விசேடத்தால், காரணகர்த்தாவாயுள்ள பரம் பொருள் சற்குருமூர்த்தியுமாய் எழுந்தருளிவந்து,



ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த—ஐந்து ஞானேந்திரியங்களாகிய வேடரோடு கூடிவளர்ந்து வருவதால் உனது நிசவடிவத்தை அறியாது மயங்கி இடர்ப்பட்டிருக்கின்றாயென்று கூறிப் பின் ஞானோபதேசஞ் செய்ய,

விட்டு அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும் — (ஐம்புலவேடரோடு கூடிவளர்ந்து வருதலை) ஒழித்துச் சிவம் தனக்கு அன்னியமாக இல்லாமையால் சிவபதமடைகின்றான். (சிவமாகவே விளங்குகின்றான்). (எ—று)

சரியை முதலியவற்றைப் பயன் நோக்காது செய்து, அதனால் சித்தசுத்தி பெற்றிருப்பவர்களுக்குப் பரமேசுவரன் குருவடிவமாக வந்து தீட்சை மூன்றினையுஞ் செய்து தத்துவோபதேசஞ் செய்கின்றான். அதனால், அவர்கள் தம்மைச் சிவமென்றுணர்ந்து, இந்திரிய வயமயங்கி வியவகாரஞ் செய்வதொழிந்து, சிவம் வேறு ஆன்மா வேறு என்னும் பேதபுத்தி சிறிதுமில்லாது சிவமாகவே விளங்குகின்றனர் என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

"தம்முதல்" என்பதில் உள்ள தம் என்றது இங்கு பிரபஞ்சத் தொகுதியை. குருவும் என்பதில் உள்ள உம்மை இறந்து தழீஇய எச்சவும்மை; உயர்வு சிறப்பும்மையுமாம். வேடரின் என்னும் ஐந்தனுருபு இங்கு உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது. அயர்ந்தனை என்னும் வினை இங்கு இறந்த காலங் காட்டாது நிகழ்காலங் காட்டி நின்றது.

குரு என்பதன் பொருள் அஞ்ஞானத்தை ஞானத்தால் ஒழிப்பவன் என்பதாம். கு என்பதன் பொருள் அஞ்ஞானம் என்பதாம்; ரு என்பதன் பொருள் ஒழிப்ப தென்பதாம். அரன் என்பதன் பொருள் (தன்னை அடைந்தவரின் பாசங்களை) அரிப்பவன் (கெடுப்பவன்) என்பதாம். வேடர் என் பதன் பொருள் இம்சிப்பவர் என்பதாம். தவமாவது மன விந்திரியங்களின் ஏகாக்கிரமாம்; அஃதாவது மனமும் இந் திரியங்களும் ஒருமுகப்பட்டிருத்தலாம்; மனத்திலுள்ள அசுத் தம் நீங்கிச் சுத்தம் ஏற்படுகின்றது. தவம் என்றது இங்கு சரியை கிரியை யோகங்களை. சரியை கிரியைகளால் பாவம் ஒழிவதாம்; யோகத்தால் மனக்கலக்கம் நீங்கி ஏகாக்கிர சிந்தை ஏற்படுகிறது. அன்னியமின்மை என்றால் வேற்றுமை யில்லாமை (அத்துவிதம்). ஞானேந்திரியம் "ஐம்புல வேடரின்" என்று கூறப்பட்டதாயினும் இனம்பற்றி அந்தக்கரணம், கருமேந்திரியம் முதலியவற்றையும் சேர்த்துக்கொள்க.

பரமேசுவரன் சீவர்களுக்கு அந்தர்யாமியாய் இருந்து அனுக்கிரகஞ் செய்து வருகின்றான். அந்தர்யாமியாய் இருத்தல் என்பது உள்ளீடாய்க் கலந்து இருத்தலை. நேரே மானிடச் சட்டை சாத்தி வந்து அடியாரைத் தடுத்தாட் கொள்ளும் அவசரங் குருமூர்த்தமெனக் கொள்க.

சற்குருமூர்த்தியின் தத்துவோபதேசத்தால் அதிகாரி புருஷன் தன்னை உள்ளவாறறிந்து தனக்கு அன்னியந் தோன்றாமையால் சிவத்தையடைந்து அச்சிவமாகவே



விளங்குகின்றான். அவன் அவ்வாறு விளங்குதல் ஆறு கடலை அடைந்து ஒன்றாகி அக்கடலாகவே விளங்குதல் போல்வதா மென்பது இங்கு உணர்தற்பாலதாம்.

பின்வரும் கவியால் இச்சூத்திரத்தின் பொருளை நன்றாக அறியலாம்:-

இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொடில்லை கண்டேனே.

(—திருவாசகம்)

உரை:-

ஐம்பொறிகளின் வசப்பட்டு, அறியாமையுற்று, இறந் தொழிவதற்கே ஏதுவாகி, இறந்தபின் வானிலே அலைந்து போய்க் கடத்தற்கரிய நரகத்தில் வீழும் இயல்புடைய எனக்கு, மனத்தைத் தெளிவடையச் செய்து, சிவசொ ரூபமாக்கி என்னை ஆண்டருளிய முடிவில்லாத பேரின்ப மானவனை அழகு கொண்டதில்லைச் சபையிற்காணலாயினேன்.

இந்திரியம் — பொறி (ஞானேந்திரியங்கள்). தில்லைச் சபை — சிதாகாசம் (ஞானாகாசம்). அணி கொள் தில்லை — அழகு கொண்ட சிதாகாசத்தில்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

### அவதாரிகை

சற்குருமூர்த்தி நீயே சிவமென உணர்த்த, அதனுல் நானே சிவமென உணர்ந்த அதிகாரி புருஷன் இந்திரியங்களின் வயமாகாது தான்பெற்ற தத்துவ ஞானத்தைத் திடமாக்கிக் கொள்ளுஞ் சாதனங்கூறல்.

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே (9)

### அந்வயம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி
உராத்துனைத்தேர்த்து எனப் பாசம் ஒருவத்
தண் நிழலாம் பதி, விதி எண்ணும் அஞ்செழுத்தே.

குறிப்பு:-

ஊனம்—குறைவு. ஊனக்கண்—குருட்டுக்கண், அதாவது சுட்டி அறிதலால் வரும் ஞானம். இதைப் பசு ஞானமென்பர்.



பாசஞான மென்பது சடப் பொருள்களை உண்மையெனக் கொள்ளும் ஞானம்; தேகாதி பிரபஞ்சம் உண்மைப்பொருளெனக்கொள்ளும் ஞானம். பசுஞானம் பாசஞானம் ஆகிய இரண்டும் அஞ்ஞானத்தைச் சேர்ந்தன. சிந்தை — இங்கு ஆன்மாவைக் குறிக்கிறது. உராத்துனை என்பது பேய். உராத்துனைத்தேர் என்பது பேய்த்தேர்; அதாவது கானற்சலம். உராத்துனைத்தேர்த்து என்பது கானற்சலம் போல (பொய்யாம்). தண்—குளிர்ச்சி. தண் நிழலாம் பதி—பிறவித் துயராகிய வெப்பத்தை நீக்கும் குளிர்ந்த நிழலாகிய பரமானந்த பூரண சிவம். எண்ணும் — கணிக்கப்படும்.

### ஒன்பதாஞ் சூத்திரத்தின் பொருள்

ஊனக்கண் பாசம் உணரா(த)பதியை — பசு ஞானத்தாலும், பாச ஞானத்தாலும் உணர்தற்கரிய சிவத்தை,

ஞானக் கண்ணினில் சிந்தை நாடி — ஞானக் கண்ணுல் ஆத்மாவாகிய தன்னிடத்தில் அபேதமாக ஆராய்ந்தறிவாஞக, (அங்ஙனம் ஆராய்ந்தறிவாஞகில், அவனுக்கு),

பாசம் உராத்துனைத்தேர்த்து என ஒருவ—மாயாப்பிரபஞ்சம் பேய்த்தேரின் (கானல்நீரின்) தன்மை போலப் பொய்யாகத்தோன்றி நீங்குவதாம். அங்ஙனம் நீங்கவே,

தண் நிழலாம் பதி — பிறவித்துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் இருக்கும் பரமானந்த சிவந்தாஞகவே விளங்குவன். (அங்ஙனம் விளங்குவது, பழைய பயிற்சி வசத்தால் புலன்களென்னும் விஷயங்களின் மீது அவனது

நினைவு செல்லுமாயின், மாறுவதாம்; அப்போது அவன் அந்நினைவு நீங்குமாறும் தான்பெற்ற சிவஞானம் திட மாமாறும்),

அஞ்செழுத்து விதியெண்ணும் – ஸ்ரீ பஞ்சாக்கரத்தை சற்குரு மூர்த்தி உபதேசித்த முறைப்படி தியானஞ் செய்வானாகை. (எண்ணும் — கணிக்கப்படும் அதாவது செபிக்கப்படும் அல்லது தியானம் செய்யப்படும்).

சற்குருமூர்த்தி நீயே சிவமென உணர்த்த நானே சிவமென உணர்ந்த அதிகாரி புருஷன் பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறிதற்கரிய நிசவடிவ சிவத்தை ஞானக் கண்ணால் தனக்கு அபேதமாக அறியுமிடத்து அவனுக்கு மாயாப்பிரபஞ்சம் கானல்நீர் போல மித்தையாகத் தோன்றுவதாம். அப்போது அவன் இந்திரிய அடக்கமும் மன அடக்கமும் உடையவனாய்ப் பரமானந்த சிவசொரூபமாக விளங்குகின்றான். பழைய பயிற்சி வயத்தால் அவனது நினைவு விஷயங்களிற் செல்லுமாயின் அவன் எய்திய தன்மை மாறுவதாம். அப்போது அவன் நினைவு நீங்குமாறும், தான்பெற்ற தத்துவ ஞானம் திடமா மாறும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி தியானஞ் செய்யக் கடவன். அதனால், அவன் விஷயங்களில் செல்லும் நினைவு ஒழியப் பெற்றுத் திடஞானமுடையவனாய், பரமானந்த பரிபூரண சிவசொரூபமாகவே விளங்குதற்கு உரியவனாவன் என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.



சிந்தை—இங்கு ஆன்மாவைக்குறிக்கிறது. நாடி—நாடுக; ஆராய்ந்தறிக. ஊனம் — குறைவு. ஊனக்கண் — குருட்டுக் கண். ஞானக்கண் என்றமையால் ஊனக்கண் அஞ்ஞானக் கண்ணுமென்பது சொல்லாமலே பெறப்படுவதாம். அதாவது சுட்டறிவாம். பசுஞானமென்பது சீவர்களால் சுட்டியறியப் படும் ஞானம். பாசஞானம் என்பது அறியப்படும் பொருட்களை உண்மைப் பொருளாகக்கொள்ளும் ஞானம்; அதாவது தேகாதி பிரபஞ்சத்தை உண்மை யெனக்கொள்ளும் ஞானம். பசுஞானம் பாசஞானம் இரண்டும் அஞ்ஞானத்தைச் சேர்ந்தன.

உராத்துனை என்பது பேயின் பரியாயப் பெயர்களுள் ஒன்று. கானல்நீர், பேய்த்தேர், உராத்துனைத்தேர், வெண்டேர் என்பன ஒரு பொருளைக்குறிக்கும் பலசொற்கள். உராத்துனைத்தேர் என்பதன் பொருள் ஒருவரால் ஊரப்படாத (செலுத்தப்படாத) வேகத்தையுடைய தேர் என்பதாம். உராத்துனைத் தேர்த்து — கானல்நீர் போல்வது (மித்தையானது). தண்ணிழல்—குளிர்ந்த நிழல். தண்ணிழலாம்பதி—வெப்பங்காரணமாகக் குளிர்ந்த மரநிழலை அடைந்தவன் தேக வெப்பம் நீங்குவதுபோல, பரமானந்த பரிபூரண சிவத்தை அடைந்தவனது தீராப்பிறவி வெப்பம் நீங்குவதால் தண்ணிழலாம்பதியென்றார். தன்னைப் பரமானந்த பரிபூரண சிவமாக அறிந்தவனுக்கு மாயாப் பிரபஞ்சம் கானற்சலம் போல மித்தையாகத் தோன்றுவதாமென்பது தாயுமானசுவாமிகள் அருளிச் செய்த பின்வரும் திருப்பாடலாலும் நன்கு விளங்குவதாம்.

இந்திரசா லங்கனவு கானலினீ
ரெனவுலகம் எமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத
தற்பரத்தைச் சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா
னந்தவெள்ளம் பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை
அனுதினமும் வழுத்தல் செய்வாம்.

இதன் உரை:-

இவ்வுலகமானது இந்திரசாலம் போலவும், கனவு போலவும், கானற்சலத்தைப் போலவும், எமக்குத் தோன்றும்படியாகச் சதாகாலமும் மேலான ஞானத்தால் என்றும் அழிவில்லாத தற்பரமாகிய சிவத்தைப் பொருந்தி வாழக்கடவாய்! மனம் மகிழுறுமாறு எந்நாளும் தடையில்லாமல் ஆனந்தப் பெருக்கானது மேலோங்கிப் பெருகவென்று வந்து கிருபை செய்கின்ற மௌன குருவினது தாமரைமலர் போன்ற திருவடிகளை நாள்தோறும் துதி செய்குவாம்.

குறிப்பு:-

சிற்பரம் (சித்+பரம்) — மேலான ஞானம், அதாவது ஆன்மாவை அறிந்து அதன் பின்பு பரத்தை நாடும் ஞானம். தற்பரம் (தத்+பரம்) — தானே தானாக விளங்கும் பரம் பொருள் (சுத்த சிவம்)



சிவம் சத்துவகுண மனதிற்கு விஷயமாவதன்றி, தாமத குண இராசதகுண மனத்திற்கு விஷயமாவதின்றென்பதை விளக்க "ஊனக்கண் பாச முணராப் பதியை, ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி" என்று கூறப்பட்டது. சத்துவகுணம் பிரகாச வடிவமாகவும், இராசதகுணம் பிரவிர்த்தி வடிவமாகவும், தாமதகுணம் மோக வடிவமாகவும் இருப்பனவாம். அசுத்த மனம் தாமதகுணம் மிக்க போது அஞ்ஞானமயமான மூடவிர்த்தியுடையதாகவும், இராசதகுணம் மிக்கபோது இராகத் துவேஷமயமான கோரவிர்த்தி உடையதாகவும் இருப்பதாம். சரியை, கிரியை, யோகமென்பவற்றை முறையாக மேற்கொண்டொழுகுவோரிடத்து தாமத இராசதமாகிய இருகுணங்களும் அடங்கி நிற்க, சத்துவகுணம் மனத்தில் மேம்பட்டு நிற்பதாம். இங்ஙனம் சத்துவகுணம் மேம்பட்டு நிற்கும் மனதிலேயே பற்றில்லாத சாந்த விர்த்தி உண்டாவதாம். இந்நிலையில் சத்துவகுண மனத்தை ஞானக்கண் என்று கூறப்படுகின்றது. இம்மனம் அதிகாரி புருஷன் தன்னில் சிவத்தை அபேதமாக அறிவதற்கு சாதனமாய் இருக்கின்றமைபற்றி ஞானக்கண் என்று கூறப்பட்டு வருகிறதென்க.

தன்னைச் சிவமாக அறிந்து மாயாப் பிரபஞ்சத்தைக் கானற்சலம் போல மித்தையாகக் கண்டவனது மனம் தன்னை (ஆத்மாவை) நோக்கி நிற்ப தொழிந்து, பழைய பயிற்சி வயத்தால் புலன்களின் மீது செல்லுமாயின் அவன் அதனை

அடக்குதற்குரிய சாதனம் ஸ்ரீ பஞ்சாக்கர தியானமன்றி பிறிதொன்றன்றும் என்பதனைத் தெரிவிக்க "விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்று கூறப்பட்டதென்க. இப்பஞ்சாக்கர செபம் அல்லது தியானம் மந்திரயோகமென்று கூறப்படுகின்றது. "ஓங்காராதிகள் அநுசந்தானத்தாற் பரத்தில் உள்ளம் அடங்குதலே மந்திர யோகம்" என்று வேதாந்த சூடாமணி கூறுகிறது.

ஸ்ரீ பஞ்சாட்சரம் (பஞ்சாக்கரம்) ஸ்தூல பஞ்சாட்சரம், சூக்கும பஞ்சாட்சரம், காரண பஞ்சாட்சரம், மகாகாரண பஞ்சாட்சரம், முத்தி பஞ்சாட்சரமென ஐவகைத்தாம். அவற்றுள்,

(1) நமசிவாய என்பது ஸ்தூல பஞ்சாட்சரமாம்.

(2) சிவாயநம ,, சூக்கும ,, ,,
இஃது ஒருதலை மாணிக்க மென்றுஞ் சொல்லப்படும். இம்மந்திரத்தின் முதலிலுள்ள "சி" என்பது மாணிக்கமாம்

(3) சிவயவசி என்பது காரண பஞ்சாட்சரமாம். இஃது இருதலை மாணிக்கமென்றுஞ் சொல்லப்படும். இம்மந்திரத்தின் முதலிலும் கடையிலுமுள்ள "சி" என்பது மாணிக்கமாம்.



(4) சிவ என்பது மகாகாரண பஞ்சாட்சரமாம். இது வசியென்றும், வாசியென்றுஞ் சொல்லப்படும்.
வசி வசி — வாசி வாசி எனத் தொடர்பாகக் கூறுமிடத்து அவை சிவ சிவ — சிவா சிவா எனத் தொடர்பாக வருவனவாம்.

(5) சி என்பது முத்தி பஞ்சாட்சரமாம். இதனோடு மகரத்தைச் சேர்த்துக் குரு உபதேசித்த முறைப்படி செபஞ் செய்யவேண்டியது. இது மகாமனு என்றும் நாயோட்டு மந்திரமென்றுஞ் சொல்லப்படும். முத்தி பஞ்சாட்சர செபத்தினால் மனோவிருத்தி (உலகவெண்ணம்) மிகு விரைவாக அடங்குவதோடு சிவானந்தமு முண்டாகிறது. நரம்புத்தளர்ச்சியை மாற்றுவதற்குச் சிறந்த மருந்து முத்தி பஞ்சாட்சர செபமாகும். நிச்சிந்தனையை உண்டாக்கி அருள் நிட்டைக்கு வழிவகுக்கிறது.

ஸ்ரீ பஞ்சாட்சர செபம் ஐந்தனுள், யாதாவதொன்றினைச் சற்குருமூர்த்தி உபதேசித்த முறைப்படி சாதனை செய்பவனுக்கு மகத்தான பலனுண்டாவதாம். இவ்வைந்து வகைப் பஞ்சாட்சரத்தை அறிந்தால் மட்டும் போதாது. செபம் அல்லது தியானஞ் செய்யும் முறையையும் முறைப்படி சற்குருமூர்த்தியின் கிருபையால் அறிந்து, அதன்படி சாதனை செய்து வரவேண்டும். அப்பொழுதுதான் மகத்தான பலனுண்டாவதாம்.

மந்திரம் என்னுஞ் சொல்லின் அர்த்தம் நினைப்பவனைக் காப்பது. மந்திரத்தை ஆசிரியர் உபதேசித்த முறைப்படி உச்சரிப்பது அல்லது நினைப்பது செபமாம். அது வாசிகம் மானசமென இருவகைத்தாம்; அவற்றுள் வாசிகம்: உச்சம், உமாம்சு என இருவகைத்தாம். மானசம்: மனனம், தியானம் என இருவகைத்தாம்.

(1) உச்சம் — மந்திரத்தை அருகிலிருக்கும் பிறர் செவிகள் கேட்குமாறு செபித்தலாம். உச்ச செபம் பயன் தருவதாயினும், கீழ் மக்கள் கேட்பதற்குரியதாயின், பயன் தருவதில்லையாம். அதனால் உச்ச செபம் செய்வது தகுதியான தன்றாம்.

(2) உமாம்சு — மந்திரத்தைப் பிறர் கேளாவாறு, தன் செவிக்கு மாத்திரம் கேட்கும்படி செபித்தல் உமாம்சு எனப்படும்.

(3) மனனம்—மந்திராட்சரங்களை நாவசையாதிருக்க, எழுத்தெழுத்தாக எண்ணுதலாம்.

(4) தியானம் — மந்திரத்தை மனமொரு முகமாகவிருந்து தைலதாரை போலத் தொடர்ச்சியாகச் சிந்தித்தலாம். இவற்றுள் உச்சத்தினும் உமாம்சும், அதனினும் மனனமும், அதனினும் தியானமும் கோடி மடங்கு பயன் தருவனவாம்.



சிவம் ஊனக்கண்ணிற்கு விஷயமாவதில்லையாம், ஞானக் கண்ணிற்கு விஷயமாவதாம். மாயாப்பிரபஞ்சம் பேய்த்தேர் (கானற்சலம்) போல்வதாம். மாயை நீங்க ஆன்மா பரமானந்த பரிபூரண சிவசொரூபமாக விளங்குவதாம். ஸ்ரீ பஞ்சாட்சர தியானம் உலகியல் நினைவை ஒழிப்பதற்குச் சிறந்த சாதனமாமென இச்சூத்திரம் கூறியதை இங்கு உற்றுணர்தல் வேண்டும்.

## பத்தாஞ் சூத்திரம்

### அவதாரிகை

சிவசொரூபமாந் தேசிகமூர்த்தி நீயே சிவமென உணர்த்த, அதனால், நானே சிவமென உணர்ந்த அதிகாரி புருஷனது வியவகாரத்தையும் அதனது பயனையுங் கூறல்.

**அவனே தானே யாகிய வந்நெறி**
**ஏக னாகி யிறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை யின்றே. (10)**

### அந்வயம்

அவனே தானே ஆகிய அந்நெறி(யின்)
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.

குறிப்பு:-

அவன்—எங்கும் நிறைந்திருக்குஞ் சிவத்தைக்குறிக்கிறது. தான் — இங்கு ஆன்மாவைக் குறிக்கிறது. அந்நெறி(யின்)— அந்நெறிபோல. நெறியின் என்ற சொல்லில் உள்ள இன் உருபு உவமையைக் குறிக்கும் உருபு, சூத்திரத்தில் தொக்கு (மறைந்து) நின்றது. (இன் — போல) ஏகம் — ஒன்று. ஏகனுகி — ஒன்ருகி, (அதாவது சிவத்துடன் ஆன்மா ஐக்கிய மாகி.) ஏகனுதற்கு ஆன்மாவை அறிந்தாலும் போதாது. பரத்தையும் அறிதல் வேண்டும். பரத்தை அறிந்தாலும் போதாது. ஆன்மாவும் பரமும் ஒன்றுதானென விளங்கும் பரிபூரண நிலையையும் அனுபவத்தில் அறிதல் வேண்டும். அதன்பின்புதான் தீராமயக்கமெல்லாம் தீர்ந்தொழியும்.

பணி — செயல், தொழில். இறைபணி நிற்க — மனம், வாக்கு, காயங்களாற் செய்யப்படும் தொழில்களெல்லாம் இறைவன் செயலாகக் கண்டு திடங் கொண்டு நின்ருல். மலமாயை தன்னெடு வல்வினை இன்று — மும்மலமும் இல்லை. மும்மலம் — ஆணவம், மாயை, கர்மம்.

பத்தாஞ் சூத்திரத்தின் பொருள்

அவனே தான் ஆகிய அந்நெறி(யின்) — சிவமே உள்ளத்தில் ஆன்மாவாகி விளங்கிய அம்முறைமைபோல,



தான் ஏகனே ஆகி — ஆன்மாவாகிய தான் அகண்ட ஏக சிவசொருபமாய் நிலைத்து, (சிவத்துடன் ஐக்கியமாகி)

இறை பணி நிற்க — தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையும் சிவச் செயலாகக் காண்பதில் தவருதும் மறவாதும் நிற்பானுயின், (அவனிடத்துக் கர்த்திருத்துவப் போக்திருத்துவப் பிராந்திகள் நீங்குவனவாம். அங்ஙனம் நீங்கவே சீவசிவ ஐக்கிய ஞானமுந் திடமாவதாம். அதனுல் அவனுக்குப் பிறவிக்குக் காரணமாயுள்ள)

மலமாயை தன்னெடு வல்வினையின்றே — ஆணவமலமும் மாயாமலமுமென்னும் இவ்விரண்டோடு வலிய கன்ம மலமும் இல்லையாம். (எ—று)

சிவசொருபமாந் தேசிகமூர்த்தி வாயிலாகச் சிவமே உள்ளத்தில் ஆன்மாவாகிய தானுய் விளங்கிய முறைமை போல (அது நான் என்னும் அனுபவம் வாய்த்து விளங்கிய முறைமைபோல), ஆன்மாவாகிய தான் அச்சிவமேயாய் (நான் அதுவாய்) விளங்குங் காலத்தில், தன்னிடத்துப் பழைய பயிற்சி வயத்தால் கர்த்திருத்துவப் போக்திருத்துவப் பிராந்திகள் உண்டாமாயின், அவை நீங்கும் பொருட்டும், தான் பெற்றுள்ள தத்துவ ஞானம் திடமாதற்பொருட்டும், தனக்கெனச் செயலொன்றின்றித் தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையுஞ் சிவச் செயலாகக் கண்டு அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாக மயக்கமின்றி நிற்பானுயின்

அவனிடத்துக் கர்த்திருத்துவப் பிராந்தியும் போக்திருத்துவப் பிராந்தியும் நீங்குவனவாம். இவ்விருவகைப் பிராந்திகளும் நீங்கவே தத்துவ ஞானமும் திடமாவதாம். அதனுல், அவனுக்குப் பிறவிக்குக் காரணமாயுள்ள மலமூன்றும் இல்லையாம், (அவையில்லையாகவே, அவன் பரமானந்த பரிபூரண சிவசொரூபமாகவே விளங்குதற்கு உரியவனுகின்ருன்) என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

கர்த்திருத்துவப் பிராந்தி — யான் கர்த்தா (செய்பவன்) என்னும் விபரீதபுத்தி. (பிராந்தி — மயக்கம்) போக்திருத்துவப் பிராந்தி — யான் தொழிலின் பயனை அனுபவிப்பவன் என்னும் விபரீதபுத்தி.

ஊனக்கண் பாசமுணராப் பதியை (சிவத்தை) ஞானக் கண்ணுல் ஆத்மாவாகிய தன்னிடத்து அபேதமாக ஆராய்ந்தறிந்த (அது நானென்று அறிந்த) அதிகாரி புருஷன் தன்னை (ஆன்மாவை) ஞானக்கண்ணுல் அப்பதியினிடத்து அபேதமாக ஆராய்ந்தறிந்தா னென்பார். "அவனே தானே யாகிய அந்நெறி, ஏகனுகி" என்ருர்.

மேற்கூறிய சூத்திரம் "தத்துவமசி" என்னும் மகா வாக்கியத்தின் அர்த்தத்தையே விளக்குகின்றது. அவனே (சிவமே) தானுக (ஆத்மாவாக) அறிதலே தத்துவமசி மகா வாக்கியம் போதிக்கிறது. தான் (ஆத்மா) அவனே (சிவமே) யாக அறிதலே துவந்தத்தசி மகாவாக்கியம் போதிக்கிறது. தத்துவமசி என்பதன் பொருள் அது (சிவம்) நீயாய் இருக்கின்ருய் என்பதாம். துவந்தத்தசி என்பதன் பொருள் நீ அதுவாய் (சிவமாய்) இருக்கின்ருய் என்பதாம்.



சிவத்தை ஆத்மாவின்கண் அபேதமாக அறிவது மகா ஆகாயத்தை கடாகாயத்தின்கண் (குடத்திற்குள் இருக்கும் ஆகாயத்தின்கண்) அபேதமாக அறிவது போலவாம். கடத்திற்குள் இருக்கும் ஆகாயம் தன்னைக் கடமாக நினைத்த நினைவை விட்டுத் தன்னை ஆகாயமாகக் கண்ட விடத்து, மகா ஆகாயம் கடாகாயத்திற்கு அபேதமாக இருக்கின்றது.

ஆத்மாவை சிவத்தின்கண் அபேதமாக அறிவது கடாகாயத்தை மகா ஆகாயத்தின்கண் அபேதமாக அறிவது போலவாம்.

கடத்திற்குள் இருக்கும் ஆகாயம் தான் கடத்திற்குள் இருக்கிறேன் என்னும் நினைவை விட்டுத் தன்னை எங்கும் வியாபகமாய் இருக்கும் ஆகாயமாய்க் கண்டவிடத்து, கடாகாயம் மகா ஆகாயத்திற்கு அபேதமாக இருக்கிறது.

பின்வருங் கவி மேற்கூறிய அர்த்தத்தை நன்ருக எடுத்து விளக்குகின்றது.

அதுநானென் ருகு மனுபவமீ தூர
அதுநழுவி நானதுவா மப்பால் — எதுவுமல
தாகிமன வாக்குக் கடங்காது நிற்பதுதான்
ஆகுநிலை முத்திமுடி வாம்.

(—ஈசூர் ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்)

குறிப்பு:-

எங்குமிருக்குஞ் சிவம் ஆன்மாவாகிய நானே என்று சாதனே செய்வதினுல், உள்ளத்தில் ஆன்ம தரிசனம் உதய மாகிறது. முன்பு ஆன்மாவைச் சொல்லளவாகவும் நினேவள வாகவும் அறிந்த பிராந்தி நீங்கி இப்போது ஆன்ம தரிச னத்தால் நேர் அநுபவம் வலுப்படுகிறது.

இவ்வனுபவம் சித்தித்தாலும் உடம்புக்குள் ஆன்மா இருக்கின்றது என்னும் பரிச்சின்னத்துவப் பிராந்தி நீங்கின தில்லேயாம். பரிச்சின்னத்துவம் என்பது கண்டமாய் (வியா பகமில்லாது) இருக்கும் தன்மை. இப்பரிச் சின்னத்துவப் பிராந்தி நீங்குதற்கு ஆன்மாவாகிய நான் எங்குமிருக்கிறேன் என்னுஞ் சாதனேயுஞ் செய்தல் வேண்டும். இச்சாதனேயால் ஆத்மாவிற்கு வியாபகமாயுள்ள சிவத்தோடு அபேதம் சித்திக் கிறது. அதனுல் பரிச்சின்னத்துவப் பிராந்தி நிவிர்த்தியாகிச் சுத்த சிவமாந் தன்மை சித்திக்கிறது.

சுட்டிப் பார்ப்பதால் துக்கமயமான உலகமே காட்சி யளிக்கிறது. சுட்டாது சும்மாவிருந்தால் சுகசொரூபந் தாஞகவே தோன்றும். அச்சுகசொரூபமே பரிபூரணமாம்; அயலொன்றில்லே.

சிவம் தனக்கன்னியமென்பது சிறிதுமின்றி இருக்கிறது. சிவத்திற்கும் எனக்கும் அற்பமாகவேனும் வேற்றுமை இல்லேயென்பதை உணர்ந்து, உணர்ந்தவாறு இருப்பவனது செயலனேத்துஞ் சிவச்செயலாக விளங்குமென்பது இங்கு உணர்தற்பாற்றும்.



ஆணவமலம் அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியாம். மாயாமலம் அஞ்ஞானத்தின் விட்சேப சக்தியாம் (அதாவது தோற்றத்தை உண்டாக்குஞ் சக்தியாம்), கன்மமலம் நன்மை தீமைகளாம். இவை தருமம் (அறம்) என்றும் அதர்மம் (பாவம்) என்றுங் கூறப்படும். ஆணவமலம் சிவசொரூ பத்தைக் கற்பனேயாக மறைப்பதாம். மாயாமலம் அச்சிவத் தினின்றும் பிரபஞ்சத்தைக் கற்பனேயாகத் தோற்றச் செய் வதாம். கன்மமலம் சீவர்களது பிறப்பிற்கும் இறப்பிற்கும் நேர் காரணமாக இருப்பதாம். ஆணவமலமும் மாயாமல மும் கன்மமலமும் முறையே அவிச்சை காமம் கர்மமென்றுங் கூறப்படுகின்றன.

''மலமாயை தன்ஞெடு வல்வினே'' போமே என்னுது ''மலமாயை தன்ஞெடு வல்வினே யின்றே'' என்று கூறி னமையின் அவை கயிற்றரவு கானனீர் முதலியன போலக் கற்பிதப் பொருளாமென்பது பெறப்படுவதாம். அவை யதார்த்தப் பொருளாமாயின், நிவிர்த்தியாவனவன்ரும்; நிவிர்த்தியாய் விடுதலின், கற்பிதப் பொருளேயாம்.

## பதினேராஞ் சூத்திரம்

அவதாரிகை

தன்னேச் சிவசொரூபமாகக் கண்டு
தெளிந்த சீவன் முத்தன் செய்ந்நன்றி
மறத்தல் என்னுங் குற்றம் தன்பால்

நிகழாவாறு சற்குருமூர்த்தியினிடத்தில் பேரன்பு உடையவனுயிருந்து விதேகமுத்தியை அடைகின்றுனெனல்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழல் செலுமே. (11)

அந்வயம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

குறிப்பு:-

காணுங் கண்ணுக்கு — காண்பதற்குத் தகுதி உடைய கண்ணுக்கு. உளம் போல் — சீவாத்மாவைப் போல. உள்ளதை என்பது செய்யுள் விகாரத்தால் "உள்ளத்தை" என வந்தது. உள்ளது என்பது என்றும் ஒரு படித்தாய் உள்ள சிவத்தை. அயரா அன்பு—சோர்வில்லாத பேரன்பு.

பதிேனாராஞ் சூத்திரத்தின் பொருள்

காணுங் கண்ணுக்கு — (உருவத்தைக்) காண்பதற்குத் தகுதியுடைய கண்ணுக்கு,



(காணக்) காட்டும் உளம் போல் — (அவ்வுருவத்தைக் காணும்படி) காட்டுகின்ற சீவாத்மாவைப் போல,

காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் — என்றும் உள்ள சத்ரூப சிவத்தைத் தானுகக்கண்டு (சற்குருமூர்த்தி) தனக்குக் காணும்படி காட்டினமையால்,

அயரா அன்பின்—(சற்குருமூர்த்தியினிடத்துச்) சோர்வில்லாத பேரன்போடு (இருந்து.)

அரன்கழல் செலுமே — (சீவன்முத்தன்) சிவபதம் அடைகின்றுன்.

சீவன்முத்த புருஷன், கண்ணுக்கு உருவத்தைக் காட்டுகின்ற சீவாத்மாவைப் போல, தனக்குச் சிவத்தைக் காட்டிய சற்குருவினிடத்துப் பேரன்புடையவனுயிருந்து விதேகமுத்தி அடைகின்றுன் என்பது இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

உளம் என்றது சீவாத்மாவை. அரன்கழன் — சிவபதம். அன்னியமின்மையாகிய அத்வைத நிலையாம்; அஃது இங்கு விதேகமுத்தியாம். முத்தி இருவகைப்படும்; அவையாவன சீவன்முத்தி, விதேகமுத்தி என்பனவாம்.

(1) தேகாதிப் பிரபஞ்சம் தோன்றிக் கொண்டிருக்கச் சிவசொரூபமாகவே நிலேத்தல் சீவன்முத்தியாம். சீவன்முத்தனுக்குத் தேகாதிப் பிரபஞ்சம் சின்மயமாகவேனும் ஆனந்தமயமாகவேனும் தோன்றும்.

(2) தேகாதிப் பிரபஞ்சம் சற்றேனும் தோற்றுதலின்றிச் சிவசொருபமாகவே நிலேத்தல் விதேகமுத்தியாம். வேதாந்த சூடாமணி விதேகமுத்தியைப்பற்றிப் பின்வருமாறு கூறுகின்றது.

பரமமா ஞானந்தோன் றுதலுமே கதிர்முன்
பாயிருள்போ லஞ்ஞானத் துடனதன் காரியமாம்
புரமுதலா யினவனைத்து மகன்றிடுத ருனே
புகலரிய விதேககை வல்லியமென் றிசைப்பர்.

உரை:-

மேலாகிய ஞானமானது உண்டானவுடனே, சூரிய சந்நிதானத்தில் வந்து பாய்ந்த இருள் நாசமடைவது போல அஞ்ஞானத்தோடு அதன் காரியம் ஆகிய சரீரம் முதலிய அனைத்தும் நீங்கிவிடுவதே சொல்லற்கரிய விதேக கைவல்லியம் என்று பெரியோர் கூறுவார்கள்.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

### அவதாரிகை

மோட்சத்தை அடைதற்கு நேர் சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தைப் பெறுதற்குச் சாதனங்களைத் தொகுத்துக் கூறல்.



செம்மலர் நோன்ருள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே. (12)

### அந்வயம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே.

குறிப்பு:-

செம்மலர் — செந்தாமரை மலர் (போன்ற).
நோன்ருள் — (நோன்மை + தாள்) பண்புத் தொகை; நோன்மை—பெருமை. தாள்—திருவடி. நோன்ருள் சர்வதுக்க நிவிர்த்தி, பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தைக் குறிக்கிறது. கழுவ என்பது கழீஇ எனத் திரிந்து நின்றது.
மரீஇ—கூடி. மால்—அஞ்ஞானம், மயக்கம். நேயம்—கருணை.
மலிந்தவர் — மிகுதியாக உடையவர். ஆலயம் — கோயில்.
அரனென — சிவமென.

### பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் பொருள்

செம்மலர் நோன்ருள் — (அதிகாரி புருஷன்) செந்தாமரை மலர் போன்ற பெரிய திருவடிகளை,

சேர லொட்டா அம்மலங் கழீஇ — அணையவொட்டாது தடுத்து நிற்கும் அம்மும்மலங்களாகிய சேற்றினை (தத்துவ ஞானமாகிய நீரினல்) கழுவுதற்பொருட்டு,

அன்பரொடு மரீஇ — சிவஞானிகளோடு (அன்பு பொருந்தக்) கூடி,

மாலற நேயம் மலிந்தவர் வேடமும் — அஞ்ஞானம் ஒழியு மாறு கருணைமிக்குடைய அவர்களது திருவேடத்தையும்,

ஆலயந்தானும் அரனெனத் தொழுமே — சிவாலயத்தையும் சிவமெனவே கண்டு தொழுது வருவானுக;

அங்ஙனம் தொழுது வருவானுயின், தத்துவ ஞானத்தை தவருது பெற்று, அதனல் மல மாயை கன்மங்களை ஒழித்து சீவன்முத்தனுக விளங்குதற்கு உரியவனுவன் என்பது குறிப்பாக உணருமாறு எஞ்சி நின்றது. இங்ஙனம் எஞ்சி நிற்பது குறிப்பெச்சமெனப்படும்.

அதிகாரி புருஷன் மோட்சமடைவதற்குத் தடையா யுள்ள அஞ்ஞானத்தைத் தத்துவ ஞானத்தாற் கெடுத்தற் பொருட்டு, சிவஞானிகளோடு அன்பு பொருந்தக் கூடி அவர்களது திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவமாகவே கண்டு தொழுது வருவானுக; அங்ஙனம் தொழுது வருவா னுயின், தத்துவ ஞானத்தைத் தவருது பெற்று, அதனல் அஞ்ஞானத்தை ஒழித்துச் சீவன்முத்தனுதற் குரியவனுவான் என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.



ஆலயம் — கோயில் (இறைவன் சீவர்கள் உய்யுமாறு தங்குமிடம்). மலமாயை கன்மங்களாகிய சேற்றினைத் தத்துவ ஞானமாகிய நீரினல் கழுவுதலாவது அதிகாரி புருஷன் சற்குருவின் உபதேசத்தால் தன்னைச் சிவமாக அறிந்து, தனக் கன்னியமாக உண்மையில் ஒன்றுமில்லையென்ப துணர்ந்து, உணர்ந்தவாறே யிருத்தலாம். என்னிடத்து மாயாப் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோற்றுகிறதென்றும், என்னைத் தவிர மாயாப்பிரபஞ்சம் இல்லையென்றும், என்று மொருபடித்தாயுள்ள சிவசொரூபமாகிய நான் மாயாப்பிர பஞ்சத்தால் வேறுபாடடைவதில்லை யென்னுந் திடநிச்சய முள்ளவனே ஞான நீரில் முழுகினவனுவன் என்க.

தத்துவ ஞானத்தின் அந்தரங்க சாதனம் எட்டு. அவை யாவன (1) நித்திய அநித்திய வஸ்து விவேகம் (2) வைராக் கியம் (இகலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள போகங்களில் பற்றில்லாமை) (3) சமாதி சட்கசம்பத்தி (4) முமுட்சுத்துவம் (5) சிரவணம் (6) மனனம் (7) நிதித்தியாசனம் (8) தத்து வார்த்த சோதனை.

பகிரங்க சாதனம்: சிவஞானிகள் விபூதி உருத்திராக்க முதலிய திருவேடமுடையவராய் இருப்பரென்பதுணர்ந்து, அவரையும், சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு தொழு தலாம். இதனல் சரியை கிரியை யோகமென்பன பகிரங்க சாதனத்தில் அந்தர்க்கதமாமென்பது செவ்வையாக விளங்கு வதாம். (அந்தர்க்கதம் — அடக்கம்)

"மாலற நேய மலிந்தவர் வேடம்" தொழுதற்குரியதாம் என்பதனுல், அவரைத் தொழுதல் வேண்டும் என்பது சொல்லாமலே பெறப்படுவதாம். சிவஞானிகளை அன்புடன் தொழுதலாலும், அவர்களின் சொற்படி நடத்தலாலும், அவர்களை ஆதரித்தலாலும் பெறப்படும் சிறந்தபயன் ஞானோதயமும், துக்கநிவிர்த்தியும், பேரின்பநிலையுமாம். பேரின்ப நிலையை இவ்வுலகத்திற் சீவிக்கும் பொழுதே அடையமுடியுமெனச் சிவஞானிகள் சந்தேகத்திற்கு இடமில்லாமல் கூறுகிருர்கள். அப்பேரின்பநிலையைப்பற்றிப் பின்வருங்கவி இனிதாக எடுத்து விளம்புகின்றது.

எங்கு மிருப்ப திறையருள் பூரணம்
அங்கு தங்கிட வானது மங்களம்
பொங்கி விளைந்தது பூரண மங்களம்
எங்குந் தங்குக வெய்துமங் களமே

சிவஞான போதச் சிற்றுரை
முற்றுப் பெற்றது.



## வஸ்து நிச்சயமும் அநுபூதி நிலையும்

நேரிசை வெண்பா

வெற்ற வெளியன்றி வேருென்றிங் காயிலிலை
வெற்றவெளி நாட்டமதில் வேருகா—துற்றுணர்ந்து
தீர்ப்பதுவே தீர்ப்பாந் திரிபாகு மேனயவை
தீர்ப்பெனினு மேலோந் திகைத்து.

வேற்றுருவ மெல்லாம் வெளியதனிற் கற்பிதமே
வேற்றுருவ நோக்கால் விபரீதம்—நீத்து
வெளிநாட்ட மாகில் விபரீத மின்றி
எளிதிற் சுகநிலையா மிங்கு.

வெளிநாட்டத் தெங்கே விபரீதம் போல
ஒளிநாட்டத் தெங்கே யுலகம் — ஒளித்ததெனில்
ஆதார நாட்டத் தவலமாப் போவதெவன்
ஆதேய மெல்லா மகன்று.

வெளிநாட்டஞ் சிந்தனையு மீக்கொள்ளக் கொள்ள
வெளியுருவாஞ் சிந்தனையு மீளா—தொளிமயமாய்
நின்றுசிதா நந்தமதாய் நீங்காச் சுபாவமதாம்
என்றுஞ் சிவோக மிது.

(ஈசூர்-ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்)

